

# சித்தாந்தம்

சைவ சித்தாந்தப் பெருமன்றத் திங்களிதழ்

*தன் கடன் அடியேனையும் தாங்குதல்*
*என் கடன் பணிசெய்து கிடப்பதே*



| | | |
|---|---|---|
| மலர் 88 | திருவள்ளுவர் ஆண்டு 2045<br>ஐப்பசி - மார்கழி - திசம்பர் 2015 | இதழ் 9 |





ஆசிரியர் : முனைவர் நல்லூர் **சா. சரவணன்**

துணையாசிரியர் : **சீ. ஞானப்பிரகாசம்**

வெளியீடு:

**சைவ சித்தாந்தப் பெருமன்றம்**

**(தோற்றம் 1905)**

4, (முதல் மாடி) வேங்கடேச அக்கிரகாரம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி: 2493 5109

தனி இதழ் ₹ 10/-

## பொருளடக்கம்

உ
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

ஆசிரியர் : முனைவர் நல்லூர் **சா. சரவணன்**

துணையாசிரியர் : **சீ. ஞானப்பிரகாசம்**

| மலர் 88 | திசம்பர் 2015 | இதழ் 9 |
|---|---|---|

## ஆசிரியர் உரை

## வாருங்கள் உத்தமர்களே!

ஆண்டுகள் ஒரு நூறு கடந்து நடைபயிலும் சைவசித்தாந்தப் பெருமன்றம் அசாதாரண வரலாற்றை உடன் கொண்டது. ஆம்!

பன்னூறு அமைப்புகள் பாரில் உண்டு. அவை ஏதாவது ஒரு வகையில் எஜமானத்துவத்தை ஏற்றுக்கொண்டிருக்கும். ஆனால், முழுக்க முழுக்க உறுப்பினர்களின் தொண்டாற்றும் திறத்தில் வழிநடத்தும் பணியாளர்களுக்கும் வாய்ப்பை வழங்கும் ஒரு ஒப்பற்ற சனநாயகத் தன்மை கொண்டது நம் மன்றம்.

அடுத்து, பல அமைப்புகள் சீரிய ஆற்றல் கொண்டவர்களால் தொடங்கப்பட்டிருக்கும் அது அவரோடு முடிந்து போயிருக்கும்! அப்படிப்பட்டவைகளில் ஒன்றுதான் சோமசுந்தர நாயகர் நிறுவிய ‘வேதாகமோக்த சைவசித்தாந்த சபை’. சபை நிறுவியவர்களுக்குப் பின்னர் சபை இருக்கும். ஆனால், அந்த நோக்கத்தில் வேகத்தில் இராது; சிலர் சொத்துஅபகரிப்பில் திக்குமுக்காடியிருக்கும்.

வைதீக சைவ சித்தாந்த சண்டமாருதம் சூளை சோமசுந்தர நாயகர் மறைவிக்குப் பின், சைவத்தின் இயக்கத்தை மையப்படுத்த

விழைந்த வீரசைவரான திருப்பாதிரிப்புலியூர் **சீர்வளர்சீர் ஞானியார் சுவாமிகளின்** முயற்சியால் முளைத்தது சைவ சித்தாந்தப் பெருமன்றம்.

இதனுடைய சனநாயகம் மகத்தானது! அபாரமானது! ஆம், சித்தாந்த அறிஞரும் செயல்திறம் உள்ளவருமான எவரும் இதனை வழிநடத்தலாம், அவ்வளவுதான்! அப்படித்தான் நூறு ஆண்டுகளைக் கடந்தும் இயங்கிக் கொண்டிருக்கிறது. முடக்கம் இருந்தாலும் விரிவாக இயங்க இடம் கொண்டிருப்பது சைவ சித்தாந்தப் பெருமன்றம்.

கடந்த பல ஆண்டுகளில் பெருமன்றம் எப்படி இருந்தது! 'சித்தாந்தம்' இதழ் எப்படி கண்களில் தெரிந்தது! என்பது நீங்கள் அறிந்ததே!

இறுதிக் கட்டமாக, கடந்த 31-10-2015 அன்று பொதுக்குழு நடந்தது. அதில் கலந்துகொள்ள அறிவிப்பு வந்தது. ஒரு கட்டுப்பாடான கண்டிப்பான அழைப்பு அது. கண்டிக்கத்தக்க ஒன்றாக அது இருந்தாலும் அது தேவையான ஒன்றாக இருந்தது!

அடையாள அட்டை வலியுறுத்தப்பட்டது. பொதுக்குழுவுக்கு அழைப்பு அனுப்பப்பட்டவர்களுக்கு மட்டும் அது. ஆனால், பொதுக்குழு அழைப்பு யாருக்கு அனுப்பப்பட்டது என்பதுதான் வேடிக்கை, ஆம்!

ஆயுள் உறுப்பினர், ஆண்டு உறுப்பினர் என எதற்கும் ஆதாரம் இல்லை! அப்படி இருந்தும், புதியதாக உறுப்பினர்களானவர்களை மறுக்க முடியவில்லை. உறுப்பினராவதைத் தடுக்க முயன்றும் முடியவில்லை. பொதுக்குழு நன்றாக நடந்தேறியது!

பொதுக்குழு இதுவரை நிகழாத ஒன்றாக நிகழ்ந்தது. பொதுக்குழுவே நிர்வாக மாற்றத்தைக் கேட்டுப் பெற்றது. பொதுக்குழுவின் சதமடித்த உறுப்பினர்கள் கூட்டம் ஒருமித்த கருத்தாக இந்த ஆண்டின் மாற்றத்தை உடனடியாகச் செய்ய வேண்டும் என்றது.

திரு.செ.வே. சதானந்தம் அவர்களின் இளவல் திரு. நமசிவாயம் அவர்கள், பெருமன்றத்தின் உச்சக்கட்ட அதிகாரம் கொண்ட இந்த

பொதுக் குழுவில் இப்போதே இந்த ஆண்டுக்கான நிர்வாக குழுவைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற தீர்மானத்தை முன்மொழிந்தார். மேலும் நிர்வாகக்குழுவில் 14 ஆண்டுகளாகத் தொடர்ந்து இருந்து வரும் குழு உறுப்பினர்கள் இல்லாமல் புதிய குழு அமைக்கப்பட வேண்டும் என்ற வேண்டுகோளையும் முன்வைத்தார். அதன் வாயிலாக முடிவான புதிய நிர்வாகக் குழுவின் தலைவர், சித்தாந்தம் இதழ் ஆசிரியர் என்ற வகையில், யான் இது தொடங்கி உங்களோடு பழக உள்ளேன்.

பாதுகாப்பு தீவிரத்தோடு பொதுக் குழுவை நடத்த வேண்டிய கட்டாய மனநிலையில் உள்ளது ஆன்மீகம்/சைவ சித்தாந்தம். இதில் இருதரப்பிலும் குறை நிறை இருக்கலாம். யாம் சொல்ல வருவது ஆன்மீகத்தில் நேர்மை இல்லாமைதான்! இந்த நேர்மை இரண்டு வகையில் வர வேண்டும்.

ஒன்று, கடவுள் பழக்கத்தில்! இன்னொன்று, கொள்கைத் தெளிவில்! நாம் இதன் மூலமாகக் கொள்கைத் தெளிவிற்குப் பயணப்பட உள்ளோம். கடவுள் பழக்கம் உங்களுடைய பொறுப்பு.

கொள்கைத் தெளிவோடு மட்டுமல்லாமல் கொள்கையைப் பரப்ப வேண்டும். அதற்கு என்ன செய்வது?

வாரக் கூட்டம் போட்டோம், மாதம் கூட்டம் போட்டோம் ஆண்டுக் கூட்டம் போட்டோம், தத்துவ விவாதங்கள் நடந்தன. அன்னம் பாலித்தால்தான் அனைவரும் வருகிறார்கள். இல்லையென்றால் கூட்டம் வரவில்லையென்று புலம்புகிறார்கள். இதன் நடுவே அவரவர் சித்தாந்தம் சாமார்த்தியம் பேசுகிறார்கள்!

இப்போது உடனடித் தேவை மக்களோடு சைவம் பழக வேண்டும். மக்கள் வாழ்வியலோடு கொள்கை இணைய வேண்டும். தேடல் உள்ள தலைமுறைக்கு! ‘சித்தாந்த அடிப்படைகள் படிப்பினைகள் ஆக வேண்டும்’. அது தொடர்ந்து தமிழ்நாட்டில் தமிழரெல்லாம் சித்தாந்தம் அடிப்படைகள் தெரிந்தவர் ஆதல் வேண்டும். அடுத்த தலைமுறை சித்தாந்தம் சைவமாக உலகறிய உழைக்க வேண்டும்.

***இந்த நோக்கத்தில் வினைக்கு விடை கொடுத்து வாழ்வோம். வாருங்கள் உத்தமர்களே!***

# சைவ சித்தாந்தப் பெருமன்றப் பொதுக்குழுக் கூட்டம்

சித்தாந்தம் அக்டோபர் 2015 இதழில் குறிப்பிடப்பட்டிருந்தபடி சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் பொதுக்குழுக் கூட்டம் 31.10.2015 அன்று மயிலாப்பூர் கோகலே ஹாலில் நடைபெற்றது. வரலாறு காணாத அளவில் உறுப்பினர்கள் எண்ணிக்கை ஒரு நூறு கடந்தது.

**பொதுக்குழுவில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.**

1. 2014 - 2015 ஆம் ஆண்டுக்கான ஆண்டு அறிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. பொருளாளர் ஜி.எம். சுந்தரம் அவர்கள் வரத் தவறியதால் இவ் அறிக்கைக்கு எதிர்ப்பு தெரிவித்தார் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், இருப்பினும் குறை இருப்பின் அவை பொருளாளர் மூலம் செப்பம் செய்யப்படும் எனத் தெரிவிக்கப்பட்டது.

2. 2014-2015ஆம் ஆண்டுக்கான தணிக்கை செய்யப்பட்ட ஆண்டு வரவு-செலவு அறிக்கை முதலியவை ஏற்றுக்கொள்ளப்பட்டன.

3. சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் செயற்குழு நிர்வாகப் பதவிகளுக்குப் போட்டியிட விரும்பும் எவரும் தீக்கை பெறா விட்டாலும் சைவத்தின் வளர்ச்சியை விரும்புகிறவராயும் சைவத் தொண்டு ஆற்றுகின்றவராயும் இருத்தல் போதுமானது.

4. பெருமன்ற செயற்குழு நிர்வாகப் பதவிகளுக்குப் பேட்டியிட விரும்புபவர்கள் பெருமன்றத்தில் நடத்தப்படுகின்ற சொற்பொழிவு களுக்குத் தேர்தல் நடத்தப்பட அறிவிப்பு செய்யப்படும் ஆங்கில மாதத்திற்கு முன்னதாக ஆறு மாதங்களில் 50% குறையாமல் வருகை புரிந்திருக்க வேண்டும்' என்ற விதிமுறையை நீக்க முடிவு செய்யப் பட்டது. (இது இந்த பொதுக்குழுவிற்கு மட்டும் ஏற்கப்பட்டது).

5. பெருமன்றத்தின் நிர்வாகப் பதவிகளுக்கான தேர்தலில் வாக்களிப்பவர் 'பொதுக்குழு நடத்தப்படுகின்ற அறிவிப்பு' சித்தாந்த இதழில் வெளியிடப்படுவதற்கு முன்னரே, நடப்பு ஆண்டில் ஆண்டு சந்தா கட்டியவராயும் இருக்க வேண்டும் அல்லது ஆயுள் உறுப்பினராகச் சேர்ந்திருக்க வேண்டும். அத்தகைய அறிவிப்பு

வெளியிடப்பட்ட பிறகு புதிப்பிக்கப்படும் ஆண்டு உறுப்பினர் வாக்கும், பொதுக்குழு அறிவிப்பு வந்தபின் புதிதாகச் சேரும் ஆயுள் உறுப்பினர் வாக்கும் செல்லாது என்று தீர்மானிக்கப்பட்டது.

6. 31.10.2015 அன்று விரிவான பாதுகாப்பு ஏற்பாட்டுடன் நடந்த பொதுக்குழுவுக்கு வந்திருந்த பெருவாரியான உறுப்பினர்கள் தற்போதைய நிர்வாகக் குழுவில் உடனடியாக மாற்றம் தேவை என்ற கருத்து ஏற்கப்பட்டது.

7. பெருமன்ற விதிகளின்படி பொதுக்குழுவுக்கு வந்திருக்க வேண்டிய உறுப்பினர்களைத் தவிர்க்க உறுப்பினர் சேர்க்கையில் தடைகளை ஏற்படுத்தியிருந்தது குறித்து விவாதம் வெகுவாக நடந்தது. அதில், முடிவு ஏற்படாத நிலையில் திரு. செ.வே. சதானந்தம் அவர்களின் தம்பியும் பெருமன்ற ஆயுள் உறுப்பினருமான திரு. நமசிவாயம் அவர்கள் பெருமன்றத்தின் உயர்மட்ட அதிகாரம் உடைய குழுவான இந்த அமைப்பில் சில முடிவுகளை எடுத்து நிர்வாகத்தில் இப்போதே ஒரு மாற்றத்தைக் கொண்டு வரலாம் என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அதனைக் கருத்து வேறுபாடு இன்றி ஒருமனதாகச் செயல்படுத்த வேண்டும் என்றார். அடுத்த நிர்வாகக்குழு பதவியேற்க வேண்டியதற்கான காலக்கெடு குறைவாக இருப்பதாலும், தேர்தலை விரிவாக நடத்துவதால் ஏற்படக்கூடிய கால விரயத்தையும், பண விரயத்தையும் தவிர்க்கும் பொருட்டு புது நிர்வாகிகளைப் போட்டி யின்றி ஏக மனதாக இப்பொதுக்குழுவாலேயே தேர்ந்தெடுக்கலாம் என்ற யோசனையை திருமதி. ஆதிரை நாகபூஷணம் முன்மொழிந்தார். இதனைப் பல பெருமக்களும் பொதுக்குழுவில் கரவொலி எழுப்பி வரவேற்றனர். சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் பொதுக்குழுவே உயர்மட்ட அதிகார அமைப்பு என்பதால் இப்போதே அதைச் செய்யலாம் என்று மேலும் வலியுறுத்தப்பட்டது. எப்பொழுதும் இல்லாத அளவுக்கு மிகத் திரளான அளவில் உறுப்பினர்கள் இப்பொதுக் குழுவில் பங்கேற்றிருப்பதால் இந்த முறை மட்டும் புதிய நிர்வாகிகளை இப்பொதுக்குழுவிலேயே போட்டியின்றித் தேர்ந்தெடுப்பதற்கு முடிவு செய்யப்பட்டது. அதனை உடனே நடைமுறைப்படுத்த நான்கு பேர் கொண்ட குழு தெரிவு செய்யப்பட்டது. அந்தக் குழு இருபது நிமிடங்களில் முடிவு செய்ய கால அவகாசம் தரப்பட்டு, 45 நிமிட கால அவகாசத்தில் அக்குழு தந்த

பரிந்துரையைப் பொதுக்குழு ஒருமனதாக ஏற்று புதிய நிர்வாகக் குழுவிற்குக் கீழ்கண்டவர்களைத் தேர்ந்தெடுத்தது

**தலைவர்** : முனைவர் நல்லூர் சா. சரவணன்
**துணைத் தலைவர்** : 1. பி.என். நமசிவாயம்
2. திருமதி. ஆதிரை நாகபூஷணம்
**பொதுச் செயலாளர்** : எம்.வி. சூரிய நாராயணன்

**செயலாளர்கள்**

1. **சொற்பொழிவுகள்/அறக்கட்டளை** : திருமதி. அ. பரமேஸ்வரி
2. **நூல் நிலையம்/நூல் விற்பனை** : ந. இராமலிங்கம்
3. **கடிதப் போக்குவரத்து** : சீ. ஞானப் பிரகாசம்

**பொருளாளர்** : பா. புகழேந்தி

**உறுப்பினர்கள்**

1. திருமதி. விஜய தாரகை
2. முனைவர் சுடலி தியாகராஜன்
3. பனசை. மூர்த்தி
4. வே. சேகர்
5. ஆர். ராஜ மாணிக்கம்
6. முனைவர். மா. இலெமூரியா
7. இராச. தண்டபாணி
8. என். வீரப்பன்
9. திருமதி. கனகசுந்தரம்
10. முனைவர். இரகுபாய்
11. பொற்றாளம் ஆறுமுகம்
12. திருமதி. எம். மீனாள்
13. முனைவர்.கே.கே. சந்திரசேகர்

பேரசிரியர் முனைவர் நல்லூர். சா. சரவணன் அவர்கள் புதிய தலைவராகத் தன்னைத் தேர்ந்தெடுத்தமைக்கு இருகரம் கூப்பி அனைவருக்கும் நன்றி செலுத்தினர். திருக்கயிலைப் புனிதர் 'நாத ஒலி' திரு. சத்தியமூர்த்தி அவர்கள் நிறைவுரை செய்ய, பின்னர் நன்றி அறிவிப்புடன் பொதுக்குழுக் கூட்டம் நிறைவுற்றது.

- பொதுச்செயலாளர்

# புதிய நிர்வாகிகள் பொறுப்பேற்பு விழா

பொதுக்குழுக் கூட்டம் 31.10.2015 அன்று நடந்தேறியதைத் தொடர்ந்து அக்குழுவின் கூட்ட நடவடிக்கைக் குறிப்பைப் பழைய நிர்வாகிகள் 11.11.2015 அன்று கொடுத்ததை அடுத்து மெய்கண்டார் குருபூசை தினமான அன்றே புதிய நிர்வாகிகள் பெருமன்றத்தில் கூடி மெய்கண்டார் வழிபாடு நடத்தினர்.

புதிய செயற்குழு பதவியேற்கவும், அவர்களுக்கு ஆசி வழங்கவும் திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழி கையிலைக் குருமணி சீர்வளச்சீர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் பேரூராதீனம் மருதாசல அடிகள் இளைய பட்டம் அவர்கள் சென்னை வருவதாக இருந்த 21.11.2015 அன்று மாலை மூன்று மணிக்கு ஏற்பாடு செய்யப்பெற்று, புதிய செயற்குழு பொறுப்பேற்பு விழா நடைபெற்றது.

பதவிஏற்பு விழாவில் திருவாளர்கள் பி.என்.நமசிவாயம், என்.இராமலிங்கம், பனசை மூர்த்தி, என்.வீரப்பன், திருமதி.எம். மீனாள் ஆகிய ஐவரைத் தவிர மற்ற 16 பேரும் கீழ்க்கண்ட உறுதிமொழி கூறி பதவி ஏற்றனர்.

***சிவபரம்பொருளை முழுமுதற் கடவுளாக ஏற்றுக் கொண்டு, பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களை விளக்கும் சைவசித்தாந்தக் கொள்கை வழி வாழ்வேன்;***
***சைவச் சின்னங்கள் அணிவேன்;***
***புலால் உணவை மறுத்துச் சைவ உணவு கொள்வேன்;***
***புகை, மது, போதை முதலிய பொருட்களைத் தவிர்ப்பேன்;***
***சைவ சமயப் பன்னிரு திருமுறைகளையும், சைவ சித்தாந்தத்தின் பதினான்கு மெய்கண்ட சாத்திரங் களையும் ஓதி உணர்ந்து செயற்படுவேன்;***
***என்று திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள் மீது கை வைத்து உறுதி கூறுகிறேன்.***

பதவி ஏற்பு உறுதி மொழியை எடுக்க வைத்து பாராட்டுரை வழங்கினார் மூத்த ஆய்வறிஞர் திரு. கி. அ. சச்சிதானந்தம் அவர்கள். அப்போது அவர் முனைவர் நல்லூர் சா. சரவணன் அவர்கள் தம்முடைய ஆராய்ச்சி திறன், தன்னலங் கருதா உழைப்பு, வேகம், பணத்திற்கு ஆசைப்படாத இயல்பு, ஆகியவற்றின் மூலம் சைவசித்தாந்தப் பெருமன்றத்தை வளர்ச்சிப் பாதையில் இட்டுச் செல்வார் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

பொறுப்பேற்பு விழாவின் நிறைவில் சொற்பொழிவுகள் செயலாளர் திருமதி. அ. பரமேஸ்வரி நன்றி கூறினார்.

- பொதுச்செயலாளர்

# சைவ சித்தாந்தப் பெருமன்றச் செயற்குழுக் கூட்டம் 21.11.2015

## கூட்ட நடவடிக்கை : சுருக்கக் குறிப்பு

31.10.2015 அன்று புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செயற்குழு உறுப்பினர்கள் கூட்டம் 21.11.2015 அன்று மாலை சுமார் 4மணி அளவில் பெருமன்றத்தில் நடைபெற்றது. அதில் கீழ்க் கண்ட நிர்வாகிகள் கலந்து கொண்டனர்.

1. முனைவர் நல்லூர் சா. சரவணன், தலைவர்
2. திருமதி. ஆதிரை நாகபூஷணம், துணைத் தலைவர்
3. திரு. எம்.வி. சூரிய நாராயணன், பொதுச் செயலாளர்
4. திருமதி. அ. பரமேஸ்வரி, செயலாளர்: சொற்பொழிவுகள்
5. திரு. சீ. ஞானப்பிரகாசம், செயலாளர்: கடிதப் போக்குவரத்து
6. திரு. பா. புகழேந்தி, பொருளாளர்

**செயற்குழு உறுப்பினர்கள்:**

7. முனைவர் இரகுபாய்
8. முனைவர் மா.இலெமூரியா
9. முனைவர் கனகசுந்தரம்
10. முனைவர் கே.கே. சந்திரசேகர்
11. முனைவர் சுடலி தியாகராஜன்
12. திரு. வே. சேகர்
13. திரு. இராச. தண்டபாணி
14. திரு. பொற்றாளம் ஆறுமுகம்
15. திரு. ஆர். ராஜ மாணிக்கம்
16. திருமதி. விஜய தாரகை

## கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள்/தீர்மானங்கள்

### *1. நிதி ஆலோசனைக் குழு*

பெருமன்ற விதிகளின்படி நிதி ஆலோசனைக் குழுவானது தலைவர், துணைத் தலைவர்களில் ஒருவர், பொதுச் செயலாளர், செயற்குழு உறுப்பினர்களுள் எவரேனும் ஒருவர், பொருளாளர் ஆகியோரைக் கொண்டதாக இருக்க வேண்டும். அதன்படி இக்குழுவிற்குத் துணைத் தலைவர்களில் திருமதி. ஆதிரை நாகபூஷணம்(துணைத் தலைவர்) அவர்களையும் திரு. என். வீரப்பன் (செயற்குழு உறுப்பினர்) அவர்களையும் செயற்குழு ஒருமனதாகத் தேர்ந்தெடுத்தது.

### *2. இதழ் ஆலோசனைக் குழு*

பெருமன்ற விதிகளின்படி இதழ் ஆலோசனைக்குழுவிற்கு தலைவர், துணைத் தலைவர்களில் ஒருவர், பொதுச் செயலாளர், துணை ஆசிரியர், இதழ் ஆசிரியர் ஆகியோரைக் கொண்டதாக இருக்கும். அதன்படி துணைத் தலைவர்களில் திரு. பி.என். நமசிவாயம் (துணைத் தலைவர்) அவர்களை இக்குழுவுக்குச் செயற்குழு ஒருமனதாகத் தேர்ந்தெடுத்தது.

### *3. மாதக் கணக்குத் தணிக்கையாளர் நியமனம்*

பெருமன்ற விதிகளின்படி பெருமன்றப் பொதுக்குழு உறுப்பினருள் தணிக்கை செய்யக் கூடிய தகுதிவாய்ந்த ஒருவரை மாதக் கணக்குத் தணிக்கையாளராகச் செயற்குழு ஒவ்வொரு வருடமும் தேர்ந்தெடுக்க வேண்டும். இவர் செயற்குழுவினருள் ஒருவராயிருத்தலாகாது. இதன்படி திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களை 2015-16 ஆண்டுக்கான மாதக் கணக்குத் தணிக்கையாளராக செயற்குழு ஒருமனதாகத் தேர்ந்தெடுத்தது.

### *4. சித்தாந்தம் இதழுக்கு ஆசிரியர்/துணை ஆசிரியர் நியமனம்*

பெருமன்ற விதிமுறை 6.0ன் படி தற்போது ‘சித்தாந்தம்’ இதழ் ஆசிரியராக உள்ள புலவர் வேலாயுதம் அவர்களுக்குப் பதிலாக

முனைவர். நல்லூர் சா.சரவணன் அவர்களை ஆசிரியராக நியமிக்க முடிவு செய்யப்பட்டது. மேலும், விதிமுறைப்படி, துணை ஆசிரியர் ஒருவரை நியமிக்கவும் ஆலோசிக்கப்பட்டது. அப்போது, 'சித்தாந்தம்' இதழை ISSN எண்ணுடன் ஒரு சர்வதேச இதழாக நடத்துவதற்குத் தலைவரின் விருப்பம் தெரிவிக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து தமிழும் ஆங்கிலமுமாக இரு மொழி இதழாக 'சித்தாந்தம்' அதிக பக்கங்களைக் கொண்டதாக வெளியிடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. அதற்குரிய வகையில் திரு. சீ. ஞானப்பிரகாசம் அவர்களைத் துணை ஆசிரியராகவும் நியமிக்க முடிவு செய்யப்பட்டது.

### *5. உறுப்பினர் சேர்க்கையை முறைப்படுத்துதல்*

முந்தைய நிர்வாகக் குழுவானது புதிய நிர்வாகக்குழுவிடம் 'பெருமன்ற உறுப்பினர்' பதிவேட்டை ஒப்படைக்கவில்லை. மாதா மாதம் 'சித்தாந்தம்' இதழ் அனுப்பப்பட்டு வந்த முகவரி பட்டியல் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. 'சித்தாந்தம்' இதழ்கள் பல முகவரி சரியில்லாததால் திரும்பப்பெறப்பட்டுள்ளன.

உறுப்பினர் எண்களும் தொடர்ச்சியாகவோ பழைய பயன்பாட்டு எண்களோ தரப்படாமல் பட்டியலில் புதிய ஓர் எண் கொடுக்கப் பட்டுள்ளது. ஆகவே உண்மையான உறுப்பினர்கள் யார் யார் என்று முடிவு செய்ய வேண்டியது அவசியம் என்பது முன்வைக்கப்பட்டது.

இதற்கு, ஓர் அறிவிப்பை வரும் 'சித்தாந்தம்' இதழில் வெளியிட்டு உறுப்பினர்களிடமிருந்து அவர்களைப் பற்றிய விவரங்களையும், புகைப்படத்தையும் பெற்று உறுப்பினர் பட்டியலைத் தொகுக்கலாம் என்று செயற்குழு முடிவு செய்தது. உறுப்பினர்கள் யாவரும் தாங்கள் உறுப்பினராக உள்ளதற்குச் சான்றாகக் கீழ்க்கண்ட ஆவணங்களுள் ஏதாவது ஒன்றை சமர்ப்பிக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

(அ) உறுப்பினர் சந்தா செலுத்தியதற்கான ரசீதின் நகல்.

(ஆ) சித்தாந்தம் இதழ் அஞ்சல்குறிப்பு உள்ள 'முகவரிப் பகுதி' நகல் அண்மைக் காலத்தது ஒன்றும், சென்ற ஆண்டு அல்லது அதைவிடப் பழைமையானது ஒன்றும் தரப்பட வேண்டும்.

இந்த விபரங்களைக் கொடுக்க இரண்டு மாத காலம் அவகாசம் கொடுப்பதென்றும், அதற்குள் கொடுக்காதவர் உறுப்பினராகக் கருதப்பட மாட்டார் என்றும் முடிவு செய்யப்பட்டது.

(இ) மேற்கண்டவை பெறப்பட்டு உறுப்பினராக உறுதி செய்யப்பட்டவர் தங்கள் புகைப்படத்துடன், தொடர்பு முகவரி, தொலைபேசி எண், நிரந்த முகவரி, புகைப்படம் ஆகியவற்றையும் அளித்தல் வேண்டும்.

### *6. பெருமன்ற வளாகம் புனரமைப்பு*

தற்போது பெருமன்றம் இரண்டு அறைகளில் செயல்பட்டு வருகின்றது. அவை பல ஆண்டுகளாக பராமரிக்கப்படாததால் அவற்றைச் சுத்தம் செய்து புதுப்பிக்க நடவடிக்கை எடுக்க முடிவு செய்யப்பட்டது. இதற்கான செலவு மதிப்பீடு முதலியவற்றைப் பெற்று செயற்குழுவின் அனுமதியைப் பெற்றுச் செயல்படுத்த திரு. சீ.ஞானப்பிரகாசம், செயலாளர் (கடிதப் போக்குவரத்து) அவர்கள் மேல் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இதற்கு இடைப்பட்ட காலத்தில் பெருமன்ற சொற்பொழிவுகள் வாய்ப்புக்கு ஏற்ப வெளியிடங்களில் ஏற்பாடு செய்யப்படும் என்று முடிவு செய்யப்பட்டது.

### *7. பெருமன்ற அலுவலகத்திற்கு பணியாளர் நியமனம்*

அலுவலகப் பணியாளர்கள் இருவரை நியமிக்கவும் மேலும் வரவு செலவு கணக்குகளைத் தொடர்ந்து முறைப்படுத்த பகுதி நேரத்திற்கு ஒருவரை நியக்கவும் முடிவு செய்யப்பட்டது.

### *8. பெருமன்றத்தில் தண்ணீர்ப் பற்றாக்குறையைத் தீர்க்க ஆழ்துளைக் கிணறு வெட்டல்*

தற்போது பெருமன்றத்திற்குத் தண்ணீர் வசதி கிடையாது. ஆகவே தடையற்ற தண்ணீர் வசதிக்கு ஆழ்துளைக் கிணறு அமைக்கவும் அதற்கு உரிய வழிமுறைகளைத் திருக்கோயில் நிர்வாகத்தின் மூலம் பெறவும் முடிவு செய்யப்பட்டது.

### *9. இணையதள வசதி ஏற்படுத்துதல்*

பெருமன்றச் செயல்பாடுகளை அனைவரும் அறிந்து கொள்ளவும், பழைய சித்தாந்தம் இதழ்களைப் படிக்கவும், சைவ சித்தாந்தக் கருத்துக்களை பகிர்ந்து கொள்ளவும், பெருமன்ற உறுப்பினர்கள் பற்றிய விபரங்களை அறிந்து கொள்வதற்கும் வழியாக ஓர் இணையதளத்தை உருவாக்க முடிவு செய்யப்பட்டது. இது பற்றிய செயல்பாடுகளைத் தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர், கணினிப் பொறியாளர்கள். திரு. வெற்றிவேந்தன், திரு. ஐயப்பன், திரு. சிவராஜ் ஆகியோர் கொண்ட குழு கவனிக்கும் என்று முடிவு செய்யப்பட்டது.

### *10. வங்கிக் கணக்கு*

பெருமன்ற வங்கிக் கணக்குகளை, தலைவர், பொதுச் செயலாளர், பொருளாளர் ஆகியோரைக் கொண்டு இயக்குவது என்றும், இதை வங்கிகளுக்குத் தெரியப்படுத்துவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

- பொதுச்செயலாளர்

## செய்தி மடல்

### தேவாரத் திருவாசகம் வாழ்வியல் கருத்தரங்கம்

குருவருள் அறக்கட்டளை சார்பில் "நால்வர் வாக்கில் வள்ளுவம்" என்ற தலைப்பில் தேவாரத் திருவாசகம், வாழ்வியல் கருத்தரங்கம் 12.12.15 (சனிக்கிழமை) மற்றும் 13.12.2015 (ஞாயிற்றுக் கிழமை) தேதிகளில் சென்னை, தியாகராய நகர், வடக்கு உஸ்மான் சாலை, தருமையாதீன சமயப் பிரச்சார நிலையம் ஸ்ரீமுத்தையா மணிவிழா மண்டபத்தில் நடைபெற உள்ளது. அனைவரும் கலந்து கொண்டு பயனடையுமாறு கொள்கின்றோம்.

## திருமுறைகள், தமிழ் இலக்கியங்கள் செம்பதிப்பு

சைவசித்தாந்தப் பெருமன்றம் தமிழ் இலக்கிய வரலாற்றில் முக்கிய பங்களிப்பாற்றியுள்ளது. பாட்டும் தொகையும் என்றிருந்த பண்டைத் தமிழ் இலக்கியங்களை 'சங்க இலக்கியம்' என்ற பெயரால் அறிமுகப் படுத்தியதும் சைவசித்தாந்தப் பெரு மன்றமே. தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க இலக்கியங்களையும், திருமுறைகளையும் செம்பதிப்புக்களாகவும் வெளியிட்டதும் நமது பெருமன்றமே.

இத்தகைய செம்பதிப்புகளை மீண்டும் வெளிக்கொணர சைவசித்தாந்தப் பெருமன்றம் முயற்சி எடுக்கவுள்ளது. ஆகவே, இப்பதிப்புகளின் பழைய படிகள் ஏதேனும் தங்களிடம் இருந்தால் அவற்றைப் பெருமன்றத்திற்கு அளித்து உதவ வேண்டுகிறோம்.

## வேண்டுகோள்/போட்டி

சைவ சித்தாந்தப் பெருமன்றத்திற்கு இதுநாள் வரை இலச்சினை/சின்னம் (Logo) இறுதி செய்யப்படவில்லை. பெருமன்ற நோக்கங்களுக்கேற்ப ஒரு இலச்சினையை வடிவமைத்துத் தருமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். பல்வேறு நபர்களிடமிருந்து இதனைப் பெற்றுத் தேர்ந்தெடுத்து இறுதி செய்ய உள்ளோம்.

Email: saivasiddhantaperumandram1905@gmail.com

- பொதுச்செயலாளர்

***சென்னை, மயிலாப்பூர் அருள்மிகு காமாட்சியம்மன் உடனாய அருள்மிகு வெள்ளீஸ்வரர் திருக்கோயிலுடன்***

## சைவசித்தாந்தப் பெருமன்றம்

***இணைந்து நடத்தும்***

## மார்கழி விழா

17-12-2015 முதல் 15-01-2016 வரை

காலை 7.30 முதல் 8.30 மணி வரை

**இடம்: *அருள்மிகு காமாட்சியம்மன் உடனாய அருள்மிகு வெள்ளீஸ்வரர் திருக்கோயில்***

**ஆன்ம நேயச் செல்வர்களுக்கு, வணக்கம்!**

மாணிக்கவாசகப் பெருமான் அருளிய திருவாசகத்திலிருந்து மார்கழி மாதம் முழுவதும் தொடர்ச்சியாகப் பின் வரும் தலைப்புகளில் **மார்கழி சிந்தனை** சொற்பொழிவுகள் நடைபெறும்.

| | |
|---|---|
| மெய்யுணர்தல் | கோயில் மூத்த திருப்பதிகம் |
| அறிவுறுத்தல் | கோயில் திருப்பதிகம் |
| சுட்டறுத்தல் | செத்திலாப் பத்து |
| ஆத்தும சுத்தி | அடைக்கப் பத்து |
| கைம்மாறு கொடுத்தல் | ஆசைப் பத்து |
| அநுபோக சுத்தி | அதிசயப் பத்து |
| காருணியத்திரங்கல் | புணர்ச்சிப் பத்து |
| ஆனந்த பரவசம் | வாழாப் பத்து |
| ஆனந்தாதீதம் | அருட் பத்து |
| ஆனந்தத் தழுந்தல் | திருக்கழுக்குன்றப் பதிகம் |
| திருப்பொன்னூசல் | கண்ட பத்து |
| அன்னைப் பத்து | பிராத்தனைப் பத்து |
| குயிற் பத்து | குழைத்த பத்து |
| திருத்தசாங்கம் | உயிருண்ணிப் பத்து |
| திருப்பள்ளியெழுச்சி | அச்சப் பத்து |

**தொடர்புக்கு**

**ந. இராமலிங்கம்**
செயலாளர், நூலகம்
9444937949

**திருமதி. அ. பரமேஸ்வரி**
செயலாளர், சொற்பொழிவுகள்
9176484922

# சைவசித்தாந்தப் பெருமன்ற வரலாறு

நூறு ஆண்டுகளைக் கடந்து வந்துள்ளது சைவசித்தாந்த மகாசமாஜம். அதன் பெயர்தான் இப்போது 'சைவசித்தாந்தப் பெருமன்றம்'. அதனுடைய உறுப்பினர்களாக உள்ள நமக்கு அதனுடைய வரலாறு தெளிவாகத் தெரிய வேண்டாமா! தொடங்கியவர்கள் யார்? எதற்காகத் தொடங்கப்பட்டது? எப்போது தொடங்கப்பட்டது? இவையெல்லாம் இந்த நவீன அறிவியல் உலகத்தில் அறிய முடியாமல் போனால் வரலற்று உலகம் நம்மை எள்ளி நகையாடாதா!

சைவசித்தாந்தப் பெருமன்றத்தைத் தொடங்குவதற்குக் காரணமாக இருந்தவர் **'தவத்திரு ஞானியார் சுவாமிகள்'** ஆவார். ஆனால் சமாஜம் தொடங்கப்பட்ட காலத்தில் யார், யார் தலைவராகவும் செயலாளராகவும், பிற பொறுப்புக்களிலும் இருந்தார்கள் என்பதும் தெளிவாகாமலே இருக்கிறது. இது தொடர்பான தகவல்களைத் திரட்டுவதில் இந்த இதழ் தொடங்கியே நாம் பயணப்படுகின்றோம். 'முதலாவதாக சைவசித்தாந்த மகாசமாஜம் 1906ல் சிதம்பரத்தில் நடத்திய முதல் மாநாடு' பற்றிய விபரங்களை அப்போது **சித்தாந்த தீபிகை** எனும் இதழில் திருவாளர் ஜே.எம்.நல்லாசாமி அவர்களால் வெளியிடப்பட்ட செய்திகளைத் தமிழாக்கம் செய்து இந்த இதழில் வெளியிடுகின்றோம்.

தொடர்ந்து சைவசித்தாந்தப் பெருமன்ற வரலாற்றை அதனோடு தொடர்புடைய ஆவணங்களை வெளியிட உள்ளோம். இதைக் காணும் நீங்களும் மகாசமாஜம்/பெருமன்றம் தொடர்புடைய செய்திகளைத் திரட்டி எங்களுக்குத் தந்து ஆவணப்படுத்த உதவுமாறு அன்போடு வேண்டிக்கொள்கிறோம்.

**- தலைவர்/இதழாசிரியர்**

# சைவ சித்தாந்த சமாஜ மாநாடு

## (சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் முதல் மாநாடு
*மொழிபெயர்ப்பாளர்: துணை ஆசிரியர்* )

**1906 டிசம்பர் 26, 27 மற்றும் 28 தேதிகளில்** முதன் முறையாக சைவ சித்தாந்த சமாஜ (பெருமன்ற) மாநாடு, மேதகு பி. இராமநாதன் அவர்களின் தலைமையில் வெற்றிகரமாக நடந்தேறியது. மாநாட்டுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட, சுமார் 1000 பேர்கள் வரை அமரக் கூடிய அந்த அரங்கு, நுழைவுச்சீட்டு வாங்கிக் கொண்டு வந்த அன்பர்களால், மாநாட்டின் முதல் நாளில் இருந்து கடைசி நாள் வரை அரங்கு நிறைந்ததாகக் காணப்பட்டது. பிரதிநிதிகள் அனைத்து தமிழக மாவட்டங்களில் இருந்தும், செகந்திராபாத்திலிருந்தும் கூட வந்திருந்தனர். பார்வையாளர்களின் ஆர்வம், தினமும் பல மணி நேரங்கள் மாநாடு நடந்தாலும் குறையவில்லை.

தலைவர் அவர்களின் பேச்சு இரண்டாம் நாளும் தொடர்ந்தது. அதை அனைவரும் மிகுந்த ஆர்வத்துடன் கேட்டனர். அவர் கண்ணீர் வழிய, நா தழுதழுக்க தன் வாழ்க்கையில் ஏற்பட்ட நெருக்கடிகளை விவரித்து, அதனால் தனக்கு ஏற்பட்ட ஆன்மீக வளர்ச்சியைத் தன் சொற்பொழிவின் மூலம் தெரிவித்தார். அனைவரும் ஆர்வம் கலந்த திகைப்புடன் அவரது பேச்சை ஒரு மனதாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். அந்த உணர்ச்சியுடன் அவர் ஒரு சில நொடிகள் தடுமாறி நிற்க, அன்பர்கள் அந்த அவையை தேவாரப் பதிகங்களால் நிரப்பினார்கள். அவர் சில இடங்களில் ஆங்கிலத்திலும் பெரும்பாலான சமயம் தமிழிலும் உரையாற்றினார். அனைத்துப் பேச்சாளர்களும் நேரம் தவறாமலும் தனக்குக் கொடுக்கப்பட்ட தலைப்பில் இருந்து விலகாமலும் பேசினர்.

தலைமை உரை அனைத்திலும் சிறப்பாக இருந்தது. அவர் ஆங்கிலத்தில் நன்றாகப் பேசுபவர் என்று கேள்விப்பட்டிருந்தாலும் அன்று அவர் தமிழில் பேசி அனைவரையும் ஆச்சரியத்தில்

ஆழ்த்தினார். அவருடைய சொல் ஆளுமை தூய்மையாகவும், எளியதாகவும் அதே நேரத்தில் நேர்த்தியாகவும் இருந்தது. பெரும்பாலான பேச்சாளர்கள் உண்மையிலேயே நன்றாகப் பேசினார்கள். தலைவர் வேதாந்த, சித்தாந்த நூல்களிலிருந்து சிலவற்றை எடுத்துக் கூறியும், சிலவற்றை விரித்துக் கூறவும் முற்பட்டார். ஆனால் அதில் தெளிவு இல்லை, அதனால் அவர் தன்னுடைய வேதாந்தக் கருத்துக்கள் மாயாவாத கருத்துக்கள் அல்ல என்பதைத் தெளிவுபடுத்தினார். திருமந்திரத்திலிருந்து பின்வரும் மந்திரத்தை எடுத்துக் கூறினார்.

"அனாதி சிவரூபமாகிய ஆன்மா
தனாதி மலத்தால் தடைப்பட்டு நின்றது
தனாதி மலமும் தடையுற்ற போதே
அனாதி சிவரூப மாகிய வாறே"

மேலும் "சிவத்தைப் போல ஒரு காலத்தில் வியாபகமாக இருந்த ஜீவாத்மா எப்படி ஆணவமல கட்டுக்குள் அடங்கியது என்பது விவரிக்க இயலாதது" என்று கூறினார். திரு. இராமநாதன் படித்த கொள்கைகளுக்கும், நம்முடைய கொள்கைகளுக்கும் சில வேறுபாடுகள் இருக்கலாம். எப்படியிருந்தாலும் சித்தாந்தம் "சிவபரம் பொருள் எக்காலத்திலும் ஆணவமல கட்டுக்குள் வராது" என்ற கொள்கையில் உறுதியாக இருக்கிறது. சங்கரரின் கொள்கையில் நம்பிக்கை வைத்த அன்பர்கள் "எப்படி தூய்மையானது, தூய்மை அற்றது ஆகியது ?" என்று கேட்ட கேள்விக்கு திரு.நல்லசாமிப் பிள்ளை "இந்தக் கேள்வியை வேறு அரங்கில் கேளுங்கள்" என்று தடுத்து விட்டார். சங்கரரின் "மேம்பட்ட வாழ்க்கைக்குத் தேவையான எண்ணங்களையும், அவற்றை அடைவதற்கு அவர் கூறிய வழிகளையும்" நாங்கள் மிகவும் மதிக்கிறோம் என்றார்.

பல்வேறு இடையூறுகள் ஏற்பட்டாலும் இலங்கையில் இருந்து வந்து மாநாட்டின் தலைமைப் பொறுப்பை ஏற்று வழிநடத்திய மேதகு பி.இராமநாதன் அவர்களுக்கு மனமார்ந்த நன்றி, சைவ குடும்பங்களின் சார்பாகத் தெரிவிக்கப்பட்டது. பின்வருவது பேச்சாளர்களின் பெயர்களும் அவர்கள் எடுத்துக் கொண்ட தலைப்புகளும் ஆகும்.

திரு. ஜே.எம்.நல்லசுவாமி பிள்ளை, B.A.B.L.,

சைவ சித்தாந்த பல்கலைக்கழகம்

திரு. பண்டிட். நாகை வேதாசலம் பிள்ளை : பிராணாயாமம்

திரு. ஆர். எஸ். சண்முக முதலியார் : சித்தாந்த மற்றும் அறிவியல்

திரு. எஸ். ஞானசிகாமணி முதலியார், B.A,.

இந்திய தத்துவத்தில் சைவ சித்தாந்தத்தின் பங்கு

திரு. பி.எம்.முத்தையா பிள்ளை : தசகாரியம்

திரு. என். தங்கவேல் முதலியார் : ஜீவகாருண்யம்

திரு. தில்லை நாயகம் முதலியார் : சித்தாந்தக் கல்வி நலம்

திரு. எஸ்.பால்வண்ண முதலியார் : தீட்சை

திரு. அஷ்டவாதனம் பி.கல்யாண சுந்தர முதலியார்

சைவ சித்தாந்தம்

திரு. எஸ்.ஞானசிகாமணி முதலியார், B.A,. : பாச லட்சணம்

திரு. பண்டிட். என்.வேதாசலம்

சைவ சித்தாந்தத்தில் கடவுள் கோட்பாடு

சென்னை மாகாணத்தின் அனைத்துப் பகுதிகளிலிருந்து வந்த பிரதிநிதிகளையும், பார்வையாளர்களையும், இனிய முகத்துடன் வரவேற்றும், மற்ற அனைத்து ஏற்பாடுகளையும் சிறப்பாகச் செய்த செயலாளர் திரு.சி.எஸ். பொன்னுசாமி முதலியார் அவர்களையே இந்த மாநாட்டின் பெருமை அனைத்தும் சேரும். வெகு சீக்கிரமே செயலாளர் மாநாட்டின் அனைத்து நடவடிக்கைகளையும், சொற்பொழிவுகள் உட்பட, அச்சு வடிவில் கொண்டு வருவார் என்று நம்புகிறேன். ***(Great credit was due to the Secretary Mr. C.S. Ponnuswami Mudaliar for all the arrangements made by him, and the delegates and visitors who had come from different parts of the presidency owe their deepest gratitude for the very kind hospitality shown by him. We hope the Secretary will get the whole proceedings with the speeches published in pamphlet form at an early date).***

---

*J.M.NALLASAMI PILLAI (EDITOR), THE SIDDHANTA DEEPIKA OR THE LIGHT OF TRUTH - A MONTHLY JOURNAL DEVOTED TO RELIGION, PHILOSOPHY, LITERATURE AND SCIENCE IN FOURTEEN VOLUMES, VOL- VII, and APRIL 1906 - MAR 1907.

**பேராசிரியர் அ.சா. ஞானசம்பந்தனாரின்**
**'திருவாசகம் - சில சிந்தனைகள்'* நூலிற்கு**
**பேராசிரியர் முனைவர் நல்லூர் சா. சரவணன்**
**தலைவர், சைவ சித்தாந்தத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்**
**அவர்கள் அளித்திருந்த நூலியலுரையிலிருந்து...**

# அண்டப்பகுதியும் அருளும்

**சி**வபுராணத்தில் முதல் பதினைந்து அடிகளில் திருவடிப் பெருமை பேசிய அடிகளார் கீர்த்தித் திருஅகவலின் தொடர் களிலும் திருவடிகளுடன் தொடங்குவதைக் குறிப்பிட்டுக் காட்டும் அ.ச.ஞா. மாணிக்கவாசருக்குக் காட்சி தந்த திருவடியை,

*"ஊனக் கண்ணாற்கூடக் கண்டு மகிழும்படி தில்லை மூதூரில் ஆடிய திருவடிகள் இப்பிர பஞ்சத்தில் அன்றும், இன்றும், என்றும் உள்ள உயிர்கள்தோறும், அவ்வுயிர் களுக்கு உயிராய் உள்ளே மறைந்து நிற்பவையாம்."*

என்று குறிப்பிடுகின்றார்.

அண்டம், உண்டை, பிறக்கம், விரிந்தன, துளி, அணு ஆகிய சொற்களின் அறிவியல் விளக்கத்தை விவரித்துச் சென்று, அறிவியல் வளர்ச்சிச் சிந்தனைகளை முன்னர் அறிவித்த அடிகளாரின் அனுபவத்தை வியக்கிறார்.

இறைவனின் திருவடியை, 'பாதாளம் ஏழினும் ஊடுருவிய பாதம்' என்பர். திருவடி அனுபவத்தை திருநாவுக்கரசரும் விரிவாகப் பேசுகிறார். பின்னர் வந்த இராமலிங்க சுவாமிகளும் 'திருவடிப் புகழ்ச்சி' என அதன் அனுபவத்தை விவரிக்கிறார். திருவடிதான் உலகமுழுதும் பார்க்கப்படுவது, உலகத்தை வாழவைப்பது. குருவின் திருவடி அனுபவமும் உபதேச அருள்மொழிகளும் மாணிக்கவாசகரை பேரானந்தத்தில் திளைக்க வைத்தன. அதன் நயமாக மாணிக்கவாசகர் எடுத்துக்காட்டிய முற்றுலக அணியைப் பேராசிரியர் அ.ச.ஞா. பின்வருமாறு தெளிவுபடுத்துகிறார்.

---

* *கவிதா பப்ளிகேஷன், தி.நகர், சென்னை, 2011*

*“சாதாரண உலக இன்பங்களைப்போல் அல்லாமல் இறைவனது அருள் என்னும் பேரானந்தப் பெருங் கடலே நீருண்ட மேகமாகி, ஞானாசிரிய வடிவ மெடுத்துத் திருப்பெருந்துறை என்னும் மலையில் தங்கிற்று. மேகம் இடி இடிப்பதுபோன்ற பெருங் குரலால் எம்மை வருக என்று அழைத்தது. மேகம் மழைத்துளியைப் பெய்வது போல இந்த ஞானாசிரியன் ஆகிய மேகம், பல்வேறு அருண் மொழிகளையும், அருட்செயல்களையும் வெளிப்படுத் திற்று. மேகம் சிதறிய துளிகள் திரண்டு, பெரிய ஆறாகப் பெருகுவதுபோல திருப்பெருந்துறையில் ஞான குருவின் அருண் மொழிகள், அருட்செயல்கள் ஞான ஆறாகப் பெருக் கெடுத்தது. ஆறு, தோன்றிய இடத்தில் அல்லாமல் நீண்ட தூரம் ஓடிச்சென்று பல்வேறு குழிகளையும் பள்ளங்களையும் நிரப்புகிறது. அதே போன்று குருவினிடம் இருந்து புறப்பட்ட ஞான ஆறு, நாலா பக்கங்களிலுமுள்ள அடியவர்களின் உள்ளங்களில் பாய்ந்து அவர்கள் மனத்துள்ளிருக்கும் அறுவகைக் குற்றங்கள் என்னும் குழிகளை நிரப்பிற்று. அறுவகைச் சமயத்தோரும் அவ்வவர் சமயங் களினூடு ஞானத்தைத் தேடி அலைந்தனர். அது கானல் நீராக முடிந்தமையின் அச்சமயவாதிகள் என்னும் மான்கணம் நெஞ்சம் மறுகி நிலை குலைந்து நின்று விட்டது. ஞானப் பேரியாற்றில் பயன் துய்த்த பெரியோர் அடைந்த பேரானந்தத்தைக் கண்டு அடியவர்கள் வழிபாடு என்ற வயலில் அன்பு என்னும் விதையை வித்தி, அதிலிருந்து சிவபோகம் என்னும் பயிரைப் பெற்றுய்யுமாறு திருப்பெருந் துறையில் தோன்றிய குருவாகிய மேகம் அருள் சுரந்தது என்க.”*

திருஅண்டப் பகுதியின் 66 தொடங்கி 95 முடிய நின்ற அடி களில் காட்டப்பட்ட அருளனுபவமே அவ்வாறு விளக்கப்பட்டது.

மானுட வடிவில் வந்துதான் சிவன் எனும் இறைவன் ஆட்கொண் டான், மாணிக்கவாசகரை என்பதை நம் கண்முன் நிறுத்துகிறார் அ.ச.ஞா.

*“அடிகளாருக்குத் திருப்பெருந்துறையில் அருள் செய்தவர் மானிட உருவுடன் இருந்தவரே ஆவார். அவரைக் கண்டவுடன் அவர் இறைவனே என்பதை தாம் தெளிந்து தேறியதாக முன்னரே அடிகள் கூறியுள்ளார். அப்படியானால் இந்த மானிட உடலின் உள்ளே உள்ள*

*பெருமானை அவர் கண்டுகொண்டார் என்பது தெளிவாகிறது. அங்கையில் உள்ள நெல்லிக் கனியை ஆழ்ந்து காண்பார்க்கு, அதனுடைய புறத்தோற்றம்போக, உள்ளே உள்ள நரம்பு மண்டலம் முதலியவை நன்கு தெரியுமாப் போலே, மானிட குருவின் உள்ளே இருந்தவரை அடிகளார் அறிந்து கொண்டார் ஆகலின், 'கையின் நெல்லிக்கனி யெனக்கு ஆயினன்" என்றார்.*

என அண்டப்பகுதியின் அங்கமான மானிட உருவில் அருளிறைவன் வந்து அருளினன் என்பதைச் சுட்டும் அ.ச.ஞா., மாணிக்கவாசகரின் உவமையை இன்னும் தெளிவாக்கி சுவைபட வாசகருக்கும் அனுபவமாக்குகிறார்.

*"அங்கை நெல்லிக் கனியென்று அனைவரும் கூறுவதுபோல கூறாமல் 'தடக்கை' நெல்லிக் கனி என்று அடிகளார் கூறுவது ஒரு நுண்ணிய வேறுபாட்டைக் கொண்டதாகும். நெல்லிக் கனியை உள்ளங்கையில் நெஞ்சுக்கு நேரே வைத்து மேலிருந்து பார்க்கும்பொழுது அதன் உள்ளேயுள்ள நரம்பு மண்டலத்தை முழுவதுமாகக் காண முடியாது. அதே கனியை, நீட்டிய கையில் வைத்துக் காணும்பொழுது காண்பவருடைய காட்சிக் கோணம் (angle of vision) மாறுபடுவதால் உள்ளேயுள்ள நரம்பு மண்டலத்தின் பெரும் பகுதியைத் தெளிவாகக் காணமுடியும். எதிரே யுள்ள குருவின் ஒரு சில அங்க அடையாளங்களை மட்டும் கண்டுவிட்டு இவர் சிவன் என்று அடிகளார் தேறவில்லை. நீட்டிய கையிலுள்ள கனியை உள்ளும்புறமும் காணுமாப்போலே புவனியில் தீண்டப்பெற்ற சேவடி தொடங்கி குருவின் திருமுடி முடியத் தெளிவாக அவரால் பார்க்கமுடிந்தது என்க. அவருடைய பார்வைக் கோணம் அடிமுடி முழுவதையும் தன்னுள் அடக்கியதாதலின் சிவன் என அவரால் தேற முடிந்தது."*

இறைவனின் இருப்புத் தெளிவைப் புலப்படுத்திய அ.ச.ஞா., மாணிக்கவாசகர் அனுபவத்தை ஒட்டி, போற்றித் திருவகவலின் பெரியவனான இறைவனின் 'அடிமுடி அறியும் ஆதரவு' பெற்ற மணிவாசகரின் பெருமையை தெளிவுபடுத்திச் செல்கிறார்.

ஆன்ம யாத்திரையின் இடையில் வரும் உலகவர் இகழ்ச்சி பற்றிய தெளிவையும் அழகாகக் குறிப்பிடுகிறார் அ.ச.ஞா.

*"உருக்கம் காரணமாக உடலிடைத் தோன்றும் வேறுபாடுகள் உலகத்தாரைப் பொறுத்த மட்டில்*

*வேறுவகையாகத் தோன்றுகின்றன. பாண்டி நாட்டின் தலைமை அமைச்சராயிருந்த ஒருவர், ஒற்றை வேட்டியுடன், கழுத்தில் உருத்திராட்ச மாலை அணிந்து கொண்டும் ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் தாமாகவே சிரித்துக் கொண்டும் அழுதுகொண்டும் தெருவழித் திரிவாரேயானால் சாதாரண மக்கள் அவரைப் பேய் கோட்பட்டவர் என்றும், பைத்தியம் என்றும் அவர் காதுபடப் பேசியதில் வியப்பொன்றும் இல்லை. இன்னும் சிலர் அமைச்சராக இருந்தவர் அதைவிட்டுவிட்டு ஏன்தான் இப்படி அலைகிறாரோ என்று பழித்தும் கூறினர்."*

இதனை இன்னும் விரித்து,

*"'சதுர்' என்பது உலகியல் அறிவுகொண்டு இன்னது செய்யப்பட வேண்டும், இன்னது தவிர்க்கப்பட வேண்டும் என்று வேறுபடுத்தி அறியும் அறிவாம். இனி 'இழந்து' என்பதால் இவ்வேறுபடுத்தி அறியும் அறிவை இழந்து என்பது பொருளாகும். இவ் இழத்தல் இருவகையில் வரும். இழத்தல், சுய அறிவை இழந்த பைத்தியங்கட்கும், அடிகளார் போன்ற இறையன்பு முதிர்ந்தவர்க்கும் பொதுவாகும். அப்படியானால் இங்கே அடிகளாருக்கு ஏற்பட்ட 'சதுரை' இழந்தநிலை பைத்தியத்தால் வந்ததா, அன்றி முதிர்ந்த அன்பால் வந்ததா என்ற வினாவிற்கு விடைகூறுவார்போலக் 'கோணுதலின்றி' என அடை கொடுத்தார். மனத்தில் ஏற்பட்ட கோணுதலுடன் சதுரை இழத்தல் பைத்திய நிலை; கோணுதலின்றிச் சதுரை இழத்தல் இறையன்பு முதிர்ந்தவர் நிலை."*

என, 'கோணுதல் இல்லா' எதுவும் கொள்ளா இறை அனுபவ ஒருமையை உலகவரால் உணர்ந்து கொள்ளப்படும் தன்மையை விவரிக்கின்றார்.

திருவடிக்காட்சி, திருவடி சம்பந்தம் என இரண்டு முறைகளில் குருவாக வந்த சிவபெருமானின் அனுபவம் அமைந்தது என மணிவாசகரின் அருளனுபவத்தை வகைப்படுத்தியும் காட்டியுள்ளார்.

- பேராசிரியர் அ.சா.ஞா. அவர்களின் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியிடப்படும் சிறப்புப் பகுதி.

# பெருமன்றத் திருமுறை இசை
# இலவச பயிற்சி

**நல்லாதரவு :**

**திருமுறைக் காவலர் சோம சுந்தரம் செட்டியார்**
**கட்டட வாரியம்**

| பயிற்சி இடம் | பயிற்சி நாட்கள் | பயிற்சி அளிப்பவர் |
|---|---|---|
| 1. பூவிருந்தவல்லி பார்வையற்ற மகளிர் அரசு இல்லம் | பிரதி ஞாயிறு | திருமதி. வள்ளி உமாபதி |
| 2. சைதாப்பேட்டை நடுநிலைப்பள்ளி | பிரதி வெள்ளி | திருமதி. வள்ளி உமாபதி |
| 3. வடசென்னை Dr. குருசாமி முதலியார் பள்ளி | பிரதி திங்கள், செவ்வாய் | திருமதி. வள்ளி உமாபதி |

**பெருமன்ற ஆண்டு உறுப்பினர் கட்டணம் - ஏப்ரல்-மார்ச் : ₹ 100/-**
**பெருமன்ற ஆயுள் உறுப்பினர் கட்டணம் : ₹ 1000/-**

திருச்சிற்றம்பலம்

Date of Publication 25th Every Month
Registered with Registrar of Newspaper for India No.1465
REGD. News Paper Posted at Egmore RMS Patrika Channel
Regd. No. TN/CH (C) 253/15-17 and Licenced to post
Without Prepayment No. TN / PMG - (CCR) WPP-443/2015-2017
Email: saivasiddhantaperumandram1905@gmail.com

**December 2015**

## DATE OF POSTING 30.11.2015

**SIDDHANTHAM**

If not delivered please return to sender
SAIVA SIDDHANTHA PERUMANRAM
4, Venkatesa Agraharam Road, Mylapore, Chennai - 600 004.

POSTED UNDER PERMIT NO. MA. EC. 16/1981 of RBI

**2015 திசம்பர்த் திங்களில் சிறப்பு நாட்கள்**

| | |
|---|---|
| 4.12.2015 | மெய்ப்பொருள் நாயனார் குரு பூசை |
| 6.12.2015 | ஆனாய நாயனார் குரு பூசை |
| 12.12.2015 | மூர்க்க நாயனார் குரு பூசை |
| 13.12.2015 | சிறப்புலி நாயனார் குரு பூசை |
| 20.12.2015 | வாயிலார் நாயனார் குரு பூசை |
| 25.12.2015 | சடைய நாயனார் குரு பூசை |
| 25.12.2015 | நடராஜர் தரிசனம் |
| 26.12.2015 | ஆரூத்ரா தரிசனம் |

Published by Nallur S. Saravanan, President, on behalf of
Saiva Siddhantha Perumanram from
4 (First Floor), Venkatesa Agraharam Street, Mylapore, Chennai - 600 004.
Printed by V.R. Mayura Priya, printed at Kailash Printers,
32, Bangaru Naicken Street, Chennai - 600 002 and
Editor : Nallur S. Saravanan